2. இப்பொழுதுதான் அடியேனது பிறப்பானது பயன்பெற்றதாகிறது. மனத்தில் ஸர்வமுமாய்க் கொண்டிருந்தும் ஈடேறியதாகிறது. அடியேன் தேவரீரை அயோத்திக்குத் திரும்பி வந்தவராய்ச் சக்ரவர்த்தியாய்க் கண்குளிரப் பார்க்கிறேன்.

3. தேவரீர் பொக்கிஷத்தையும், தான்யசாலையையும், நகரத்தையும், ஸேனையையும் கடாக்ஷித்தருள்வீராக. எல்லாமும் தேவரீருடைய அருளால் அடியேனால் பதின் மடங்கு அதிகமாகச் செய்யப்பட்டு இருக்கிறது.

பரதன் செய்த ஸ்துதி முற்றும்

யுத்த காண்டத்தில் 131ஆவது ஸர்கத்தில் நவரத்னங்கள் இழைத்த ஸிம்ஹாஸனத்தில் ஸீதையுடன் சேர்ந்து அமர்ந்திருக்கிற ஸ்ரீராமபட்டாபிஷேகம் செய்விக்கும் பொருட்டு வசிஷ்டர் முதலான ப்ரம்மரிஷிகள் ஈடுபட்டு இருக்கும் விஷயமான ஸ்லோகங்கள்.

1. அதன் பிறகு பெரியவரும் அதி ஆசையுடன் இருந்தவருமான அந்த வசிஷ்ட பகவான் ப்ராம்மணர்களோடு கூட ஸ்ரீராமரை ஸீதாதேவியுடன் ரத்னமயமான ஸிம்ஹாஸனத்தில் விற்றிருக்க வைத்தார்.

2, 3. வசிஷ்ட பகவானும், வாமதேவரும், ஜாபாலியும், காச்யபரும், காத்யாயனரும், ஸுயக்ஞரும், கௌதமரும், விஜயரும், அஷ்டவஸுக்களும், த்ரிலோகாதிபதியுமான இந்த்ரனை எப்படியோ அப்படி, நறுமணங் கமழும் மந்திரமோதிப் புனிதமான தீர்த்தத்தால் புருஷோத்தமரை மங்களாபிஷேகம் செய்வித்தார்கள்.

பட்டாபிஷேகம் முற்றும்

பட்டாபிஷேக ஸமயத்தில் மித்ரர்களின் பொருட்டும் தன்னை அண்டியிருக்கும் நலிந்தவர்கள் மற்றும் ஏனைய வர்களின் பொருட்டும் எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு பணம், பொன்னாலான அணிகலன்கள், பூமி, முத்துக்கள், யானைகள் முதலியவற்றைக் கொடுத்து ஸ்ரீராமசந்த்ர மூர்த்தி தன்னுடைய ராஜ்யத்தைப் பெறுகிறார்.

1. புருஷோத்தமர் லக்ஷம் குதிரைகளையும், அப்போது ஈன்ற லக்ஷம் பசுக்களையும், நூறு காளைமாடு களையும் முதலில் ப்ராம்மணர்களுக்குத் தானம் செய்தார்.

2. ஸ்ரீராமர் மீண்டும் ப்ராம்மணர்களுக்கு முப்பது கோடி பொன் நாணயங்களையும், மிக விலையுயர்ந்த பல வகை ஆபரணங்களையும், வஸ்த்ரங்களையும் தானம் செய்தார்.

---

ஸ்ரீமத்ராமாயணம் படிப்பவர்களுக்கும், கேட்பவர் களுக்கும் இஹபரலோக ப்ராப்திபரமான ஸ்லோகங்கள்.

1. குற்றமற்ற செயலை உடைய ஸ்ரீராமருடைய வெற்றியைப் பற்றிய இந்த ஸ்ரீமத்ராமாயணத்தை முழுவது மாகக் கேட்பவர்கள் நீண்ட ஆயுளை அடைவார்கள்.

2. ஸ்ரீமத் ராமாயணத்தைக் கேட்டு அரசன் பூமியை வெற்றிகொண்டு ஆளுவான். யாத்ரை செல்பவன் க்ஷேம மாகவே செல்வான். புத்ரர்களைப்பெற ஏற்ற வயதி லிருக்கும் ஸ்த்ரீகள் சிறந்த புத்ரர்களைப் பெறுவார்கள்.

3. இந்தப் புராதனமான உண்மையான சரித்ரத்தைப் பூஜை செய்கிறவனும், பாராயணம் செய்கிறவனும், ஸகல பாபங்களினின்றும் விடுபடுவான். நீண்ட ஆயுளையும் அடைவான்.

4. இந்த ஸ்ரீமத் ராமாயணம், க்ஷத்ரியர்களால் ப்ரதி தினமும் முடி தாழ்த்தி நமஸ்கரித்து, ப்ராம்மணனிடமிருந்து கேட்கத் தக்கது. ஐச்வர்யமுண்டாகும். புத்ரப்பேறும் உண்டாகும். இதில் ஐயமில்லை.

5. இந்தப் பெரும் பொருளடங்கிய புண்யமான காவ்யத்தைக் கேட்டு இவ்வுலகிலேயே வம்ச வ்ருத்தியையும், தனதான்ய விருத்தியையும், குணவதிகளான மனைவிகளையும், உத்தமமான மன த்ருப்தியையும் எல்லா மனோரதங்களின் ஸித்தியையும் அடைகிறான்.

6. இந்த ப்ரகாரம் முன் நடந்த இந்தச் சரித்திரத்தை நம்பிக்கையுடன் சொல்லுங்கள். உங்களுக்கு மங்களம் உண்டாகட்டும்! மஹாவிஷ்ணுவின் அனுக்ரஹத்தால் உண்டாகும் பலமானது லோகத்தில் வ்ருத்தியடையட்டும்.

விஜயலக்ஷ்மியுடன் சேர்ந்திருப்பவரும் பட்டாபிஷேகம் செய்யப்பெற்றவருமான எல்லா உலகையும் சந்தோஷிக்கச் செய்கிறவருமான தன் அவதார ரூபமாகிய வீர கேஸரியும், மானுஷ சிம்மமும், எதிரிகளை ஒழித்த பராக்ரமத்தை உடையவரும், போஸல குலமான சமுத்ரத்தில் ரத்னம் போலுதித்தவரும், பொதுமக்களிடையே பேதமின்றிக் கலந்துப் பழகும் குணமுடையவரும், அடியார்களிடத்திலும், அடியார்களின் இடர் களைபவனும் ப்ரம்ம விதாக்ரேஸருமான சீதாராமரான ஸ்ரீராமர் நீண்ட ஆயுள் ஆரோக்யம், புத்ர பாக்யம் முதலிய ஐச்வர்யங்களையும் கொடுக்கட்டும்.

(ராம சரிதத்தை சுருக்கமாகச் சேகரிக்கப்பெற்ற) இந்த ஸ்தோத்ரராமாயண க்ரந்தம் சுப்ரம்மண்ய வித்வாம்சரால் சேகரிக்கப்பெற்றது (இயற்றப்பெற்றது). இதனைப் படிப்பவர்களுக்கு ஸர்வ மங்களமும் உண்டாகட்டும்.

ஸ்ரீஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ண ஹனுமத்ஸமேத
ஸ்ரீராமசந்த்ரார்ப்பணமஸ்து



பிற்சேர்க்கை:

# பால காண்டம்

பால காண்டத்தில் 1ஆவது ஸர்கத்தில் ஸ்ரீராமனை ஸ்தோத்ரம் பண்ணுவதாக அமைந்துள்ள ஸ்லோகங்கள்.

1. இக்ஷ்வாகு வம்சத்தில் அவதரித்து ராமர் என்றே ஜனங்களிடம் (மக்களிடம்) ப்ரசித்தமானவர். இவர் மனதை அடக்கியவர். அதிக வீர்யமுள்ளவர். காந்தியுள்ளவர். தைர்யமுள்ளவர். எல்லாவற்றையும் தன் வசப்படுத்திக் கொண்டவர்.

2. சிறந்த புத்தியுள்ளவர். ந்யாய முறைப்படி நடப்பவர். பேச்சுத்திறனுள்ளவர். ஐச்வர்யமுள்ளவர். எதிரிகளை அழிப்பவர். அகன்று உயர்ந்த தோள்களுள்ளவர். அழகிய நடையுள்ளவர்.

3. அகன்ற மார்புள்ளவர். பெரிய வில்லை உடையவர். மறைந்த கழுத்து எலும்புகளுள்ளவர். எதிரிகளை அடக்குபவர். முழங்கால் வரை நீண்ட கைகளுள்ளவர். அழகிய சிரஸ்ஸும் நெற்றியுமுள்ளவர். அழகிய நடையுள்ளவர்.

4. எல்லோரிடத்திலும் பக்ஷபாதமில்லாமல் ஸமமாக இருப்பவர். ஒழுங்காகப் பிரிந்துள்ள அவயவங்களும், பளபளப்பான மேனியும், எதிரிகளை அச்சுறுத்தும் வலிமையைக் காட்டும் காந்தியும், பருத்த மார்பும், அகன்ற கண்களும் உள்ளவர். லக்ஷ்மியுடன் கூடியவர். மங்களகரமான லக்ஷணங்கள் பொருந்தியவர்.

5. தர்மமறிந்தவர், ஸத்யமான ப்ரதிக்ஞையுள்ளவர். ப்ரஜைகளுக்கு நன்மை செய்வதில் ஈடுபட்டவர். புகழுடன் கூடியவர். அறிவு நிறைந்தவர். சுத்தமானவர். நல்லோர்களுக்கு வசப்பட்டவர். மன ஒருமைப்பாடு உள்ளவர்.

6. ப்ரம்மாவிற்குச் சமமானவர். சோபையுள்ளவர். உலகைப் படைப்பவர். எதிரிகளை அழிப்பவர். ஜீவ ராசிகளைக் காப்பாற்றுபவர். தர்மத்தை நன்கு காப்பாற்றுகிறவர்.

7. ஸ்வதர்மத்தைக் காப்பாற்றுகிறவர். தன்னைச் சேர்ந்தவர்களைக் காப்பாற்றுகிறவர். வேத வேதாங்கங்களாகிய சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் ஆகிய அனைத்தின் உண்மைப் பொருளை அறிந்தவர். வில்வித்யையில் மிக்கத் திறமை உள்ளவர்.

8. எல்லா சாஸ்த்ர விஷயங்களின் உண்மைப் பொருளை அறிந்தவர். ஞாபக சக்தி மிகுந்தவர். ஸமயோசித புத்தியுள்ளவர். எல்லா ஜனங்களுக்கும் ப்ரியமானவர். குற்றமற்றவர். தைன்யமில்லாத கம்பீரமான ஸ்வபாவமுள்ளவர். அறிவு நிரம்பியவர்.

9. நதிகள் கடலை நோக்கிச் செல்வது போல் ஸாதுக்கள் ராமரிடம் சென்று அவரை ஆச்ரயிக்கின்றனர். நன்னடத்தையுள்ளவர். எல்லோரையும் பக்ஷபாதமில்லாமல் ஸமமாகப் பார்க்கிறவர். எப்பொழுதும் நிகரற்றதும், மனதிற்குப் ப்ரீதியையே உண்டுபண்ணுகிறதுமான தோற்றமுள்ளவர்.

10. எல்லா நற்குணங்களுடன் கூடிய அந்த ராமர் கௌஸல்யைக்கு ஆனந்தத்தை வளர்க்கின்றவர். காம்பீர்

யத்தில் ஸமுத்ரம் போலும், தைர்யத்தால் இமயமலை போலுமிருப்பவர்.

11. வீர்யத்தில் விஷ்ணுவுக்கு ஸமமானவர், சந்த்ரன் போல் இன்பம் தரும் தோற்றமுள்ளவர். கோபத்தில் ப்ரளயகாலாக்நிக்கு ஒப்பானவர். பொறுமையில் பூமியைப் போன்றவர், த்யாகத்தில் (கொடையில்) குபேரனுக்கு ஸமமானவர். ஸத்யத்தில் மற்றொரு தர்ம தேவதை போன்றவர்.

12. இத்தகைய குணங்கள் நிறைந்தவரும். வீண் ஆகாத பராக்ரமமுள்ளவரும், மூத்த குமாரரும் சிறந்த குணங்களோடு கூடியவரும். தனக்குப் பிரியமானவரும். ப்ரஜைகளின் நன்மையில் ஈடுபட்டவருமான அந்த ராமரைத் தசரத மன்னர் ஜனங்களுக்குப்ரீதி ஏற்படுவதில் ஆசையால் இளவரசு பதவியுடன் சேர்ப்பதற்கு ஸந்தோஷத்துடன் விரும்பினார். (பட்டாபிஷேகத்திற்கு உண்டான ஏற்பாடுகளைச் செய்தார்)

1. கௌஸல்யையின் செல்வக்குமாரா ! ஸ்ரீராமா ! புருஷோத்தமா ! காலை ஸந்த்யாகாலம் நெருங்குகிறது. தேவர்கள் சம்பந்தப்பட்ட தினக்கடமை செய்யத் தக்கது எழுந்திருக்கவும்.

பால காண்டம் முற்றும்



# அயோத்யா காண்டம்

அயோத்யா காண்டத்தில் 48ஆவது ஸர்கத்தில் பட்டணத்து ஸ்த்ரீகளின் விலாப ஸ்லோகங்கள்.

1. எங்கு ஸ்ரீராமர் எழுந்தருளி இருக்கிறாரோ அங்கு ஆசைக்கு இடையூறு என்பது உண்டாகாதான படியால் விரும்பியது பெறாமையால் விளையும் ஏக்கம் என்பது இல்லை. ஏனெனில் தசரத சக்ரவர்த்தியாருக்குத் திருக்குமாரராய் இருக்கும் (ஸ்ரீராமர்) அவர் தான் ஒப்பாரும் மிக்காரும் அற்ற சூரராகிய மஹாவிஷ்ணு.

அயோத்யா காண்டத்தில் 51ஆவது ஸர்கத்தில் லக்ஷ்மணனிடம் குஹன் கூறும் ஸ்லோகம்.

1. இவ்வுலகில் எனக்கு ஸ்ரீராமரைவிட அதிக பக்திக்குப் பாத்திரமாகிறவர் வேறு ஒருவரும் இல்லை. இதைச் சத்யமாக நான் சொல்கிறேன். இன்னும் சத்யத்தின் மேலும் தேவரீர் முன்னிலையில் ஆணை இடுகிறேன்.

அயோத்யா காண்டம் முற்றும்

# ஆரண்ய காண்டம்

ஆரண்ய காண்டத்தில் 38வது ஸர்கத்தில் ராவணனிடம் மாரீசன் உபதேசமாகக் கூறிய ஸ்ரீராம மஹிமையைச் சொல்லும் ஸ்லோகங்கள்.

1. உலகில் அந்த அரக்கனுக்கு இராமனைக் காட்டிலும் வேறு சைன்யம் ப்ரயோஜனமுள்ளது ஆகாது.

2. நீர் யுத்தங்களில் தேவர்களுக்கும் உதவி புரிகின்றவர். சக்கரவர்த்தித் திருமகனே! நடைபெற்றுள்ள உமது செய்கை மூன்று உலகங்களிலும் ப்ரஸித்தி பெற்றதாய் விளங்கிற்று.

3. சத்ருக்களை அழிப்பவரே! பெரும் சைன்யம் இங்கேயே இருக்கட்டும். என் இஷ்டப்படியே நிறைவேறட்டும்.

4. இவன் சிறு பையனாக இருந்தாலும், அவனை ஒழிக்கும் விஷயத்தில் மஹா ஆற்றல் கொண்ட சாமர்த்யமுள்ளவன். பகைவர்களைத் தபிக்கச் செய்பவரே! ராமனை அழைத்துக்கொண்டு போகிறேன். உமக்கு க்ஷேமம் உண்டாகட்டும்.

5. அந்த விச்வாமித்ர முனிவர், இவ்வாறு சொல்லிவிட்டு அந்தச்சக்கரவர்த்தியின் புதல்வனை அழைத்துக்கொண்டு அதனால் பரம மனத்ருப்தி கொண்டவராய்த், தனது ஆச்ரமத்திற்கு வந்து சேர்ந்தார்.

6. இராமன் அப்பொழுது தண்டகாவனத்தில் யாகத்தைச் சங்கல்பித்துக்கொண்டு, தீக்ஷையில் இருக்கும் அவருக்குத் திவ்யமான தனுஸ்ஸை நாணொலி செய்து கொண்டு அருகில் இருப்பவராக விளங்கினான்.

7 - 8. யௌவனக் குறிகளாகிய மீசை முதலியன முளைக்கப் பெறாதவனும், அழகு மிகுந்தவனும், தாமரை இதழ் போன்ற கண்களை உடையவனும், ஒரே வஸ்த்ரத்தை உடுத்தி இருந்தவனும், அழகு வாய்ந்த குடுமியுடன் இருந்தவனுமான இராமன் வில்லைக் கையில் ஏந்தியவனாய் அப்பொழுது எழில் வீசும் தனது தேஜஸ்ஸாலும், பொற்பூணூலாலும், தண்டகாவனத்தைத் திகழச் செய்கின்றவனாய் உதித்த இளம்பிறைச் சந்த்ரன் போல் காணப் பெற்றான்.

**9.** மேகத்திற்கு நிகரானவனும், சுத்த பொன் குண்டலங்களை அணிந்தவனும், பலசாலியும், வரங்களைப் பெற்றவனுமான நான், செருக்கால் அவரது ஆச்ரமத்திற்கு அப்பொழுது வந்தேன்.

*10.* ஆயுதங்களைத் தயாரித்துக் கொண்டவனாய் நான், ஆலோசனையின்றிப் புகுபவனாகவே அவனால் பார்க்கப் பெற்றேன். அவன் என்னைப் பார்த்ததும் கலங்காதவனாய்த் தனுஸை நாணேற்றினான்.

*11.* நான் இராமனை, புத்தியின்மையால் இவன் சிறுபிள்ளை என்று அலக்ஷ்யம் செய்தவனாய் விச்வாமித்ரருடைய அந்த யாக மேடையை அவசரப்பட்டுத் தாக்கினேன்.

*12.* அப்பொழுது அவனால், சத்ருக்களை வதைக்க வல்ல கூரிய ஓர் பாணம் விடப்பட்டது. அதனால் அடிக்கப்பட்ட நான் சமுத்ரத்தில் நூறு யோசனை தூரத்தில் தள்ளப்பட்டேன்.

*13.* அப்பா! அப்பொழுது என்னைக் கொல்ல மனம் வராத தனி வீரனாகும் அவனால் உயிருடன் விடப்பட்ட நான் இராமனது பாண வேகத்தால் ப்ரக்ஞை அற்றவனாக எறியப் பெற்றேன்.

*14.* அப்பா! அப்பொழுது அவனால் ஆழ்ந்த சமுத்ர ஜலத்தில் வீழ்த்தப்பட்ட நான், நல்லறிவை வெகு நேரம் கழித்து அடைந்து இலங்கை நகருக்குச் சென்றேன்.

**மாரீசனால் சொல்லப்பெற்ற இராம மஹிமானுவர்ணனம் முற்றும்**

**ஆரண்ய காண்டம் முற்றும்**

# சுந்தர காண்டம்

---

சுந்தர காண்டத்தில் 31 ஆவது ஸர்கத்தில் ஹனுமனால் சொல்லப் பெற்ற ஸ்ரீராம வ்ருத்தாந்த ஸ்லோகங்கள்.

1—3. உத்தம குணங்களால் ரிஷி போன்ற ராஜாக்களுக்குள் சிறந்தவனும், தபஸினால் ரிஷிகளுக்கு ஒப்பானவனும் சக்ரவர்த்தி குலத்தில் பிறந்தவனும் பலத்தில் இந்த்ரனுக்கு ஒப்பானவனும், அஹிம்ஸையில் ஆசை கொண்டவனும் இளகின மனமுள்ளவனும். கருணையுள்ளவனும், ஸத்யத்தால் சத்ருக்களை அடக்குகிறவனும், இக்ஷ்வாகு வம்சத்திற்குத் தலைவனும், தனஸம்ருத்தியுள்ளவனும், உலகத்திற்கு தனஸம்ருத்தியைத் தருகிறவனும், அரசர்களுடைய அடையாளங்களாகிற சத்ர சாமர ரேகை யுள்ளவனும், அளவற்ற ஐச்வர்யமுள்ளவனும். அரசர்களுக்குள் சிறந்தவனும், நான்கு ஸமுத்ரத்திற்கு உட்பட்ட பூமியில் ப்ரஸித்தி பெற்றவனும் உலகிற்கு ஸுகத்தைக் கொடுப்பவனும், அதனால் தானும் ஸுகமாக வாழ்பவனுமான தசரதன் என்ற ப்ரஸித்தி பெற்ற ராஜா இருந்தான்.

4, 5 அந்த அரசனுடைய புத்ரனும், உலகிற்கு ப்ரியனும், மூத்தவனும், சந்த்ரனுக்கொப்பான முகமுள்ளவனும், விசேஷமறிந்தவனும், எல்லா வில்லாளிகளிலும் சிறந்தவனும், தனது தர்மத்தை அனுஷ்டித்துக் காக்கிறவனும், தனது பந்துக்களை ரக்ஷிக்கிறவனும் உலகையும், உலகத்தில் செய்ய வேண்டிய தர்மத்தையும் பரிபாலனம் செய்கிறவனும் சத்ருக்களை வாட்டுபவனுமான ராமன் என்ற ப்ரஸித்தன் ஒருவன் இருந்தான்.

6. ஸத்ய ஸங்கல்பனும், வயதானவனும், தகப்பனுமான அந்த தசரதனுடைய வார்த்தையினால் தன் பத்னியுடனும், சகோதரனான லக்ஷ்மணனுடனும் வீரனான ராமன் காடு சென்றான்.

7. அந்தப் பெருங்காட்டில் வேட்டையைக் குறித்து அங்குமிங்கும் ஓடுகின்ற ஸ்ரீராமன் காமரூபிகளும், சூரர்களுமான கரன், தூஷணன் முதலிய பல ராக்ஷஸர்களை வதம் செய்தான்.

8. ஜனஸ்தானத்தில் பதினாலாயிரம் ராக்ஷஸர்களை வதம் செய்ததையும், கர தூஷணர்களைக் கொன்றதையும், ராவணன் கேட்டுப் பொய்யான அழகிய மானை உதவியாக வைத்துக்கொண்டு ராமனை ஏமாற்றிக் கோபத்தால் ஸீதையை எடுத்துச் சென்றான்.

9. குற்றமற்றவளான அந்தத் தேவியான ஸீதையை ராமன் தேடிக்கொண்டு காட்டில் ஸுக்ரீவன் என்ற ப்ரஸித்தி பெற்ற குரங்கை அடைந்து ஸ்நேஹிதனாகச் செய்து கொண்டான்.

10. சத்ருக்களின் பட்டணத்தை ஜெயிக்கிறவனும், சிறந்த பலமுள்ளவனுமான அந்த ராமன் பிறகு வாலியை வதம் செய்து குரங்குகளின் அந்த ராஜ்யத்தை ஸுக்ரீவனுக்குக் கொடுத்தான்.

11. ஸுக்ரீவனால் ஏவப்பட்டவர்களும் இஷ்டப்படி ரூபத்தை எடுத்துக் கொள்பவர்களுமான ஆயிரக்கணக்கான குரங்குகள் தேவியான அந்த ஸீதையை எல்லாத் திக்குகளிலும் தேடுகின்றனர்.

12. ஸீதை லங்கையிலிருக்கிறாளென்று ஸம்பாதி சொன்ன வார்த்தையினால் நூறு யோசனையுள்ள

ஸ்முத்ரத்தை அகன்ட கண்களையுடைய ஸீதையின் காரணமாய் நான் வேகமாகத் தாண்டிவந்தேன்.

13. ராகவனிடமிருந்து ஸீதையை எம்மாதிரி சரீர முள்ளவளென்றும். எம்மாதிரியான நிறமுள்ளவளென்றும், எம்மாதிரியான அழகு வாய்ந்தவள் என்றும் நிச்சயமாகக் கேட்டறிந்தேனோ அந்த ஸீதையை நான் கண்டு விட்டேன்.

இவ்வாறு ஹனுமார் ராம சரித்ரத்தைச் சொல்லி முடித்தார்.

அடுத்து முப்பத்திரண்டாவது ஸர்கத்தில் எப் பொழுதும் ஸ்ரீராமனையே த்யானம் செய்யக் கூடிய ஹனுமாரைக் காணுதல்.

1. எப்பொழுதும் புத்தியினால் ஸ்ரீராமனையே த்யானம் செய்து கொண்டு ராம ராம என்று வாக்கி னாலும் ஸ்ரீராமநாமாவைச் சொல்லுகின்ற நான் ஸ்ரீராமனைச் சேர்ந்த கதையைக் கேட்கிறேன். அப்படியே அந்தக் கதையின் பொருளையும் அறிகிறேன்.

2. நான் இப்பொழுது ஸ்ரீராமருடைய காமத்தால் நன்கு பிடிக்கப்பட்டவளாயும், ஸ்ரீராமரிடத்திலே சென்ற எல்லா எண்ணங்களையுடையவளாயும், எப்பொழுதும் ராமரையே த்யானம் செய்கின்றவளாயும் இருந்துகொண்டு அதற்கு ஏற்றவாறு பார்க்கிறேன்; அதற்கு ஏற்றவாறு கேட்கிறேன்.

3. இங்கு ராமாயணம் சொன்ன குரங்கை என் மனதில் தோன்றிய எண்ணமென்றே நினைக்கிறேன். ஆனாலும் இது தோற்றமா, ஸத்யமாகவே ராமசரித்ரம் சொல்லிய குரங்கா என்று விவேக சக்தியினால் யோசிக்

கிறேன். இப்படி யோசிப்பதற்கு என்ன காரணம் என்றால் மனத்தோற்றத்திற்கு உருவம் கிடையாது. இந்தக் குரங்கோ நன்கு புலப்படுகின்ற உருவத்தோடு என்னைப் பார்த்துச் சொல்லுகிறது.

4. (இப்பொழுது கேட்ட ராம வார்த்தை வாஸ்தவமான ராம தூதனே சொல்லி இருக்க வேண்டுமென்று தேவர்களை நமஸ்கரித்து ப்ரார்த்திக்கிறாள்) வாக்கிற்குப் பதியான ப்ருஹஸ்பதியின் பொருட்டு நமஸ்கரிக்கிறேன் இந்த்ரனையும் நமஸ்கரிக்கிறேன். ப்ரம்மாவையும், அக்னியையும் நமஸ்கரிக்கிறேன். என் முன்னிலையில் இந்தக் குரங்கினால் சொல்லப்பட்ட ராம சரித்ரமானது ஸத்யமான ராம தூதனால் சொல்லியதாகவே இருக்க வேண்டும். வேறு விதமாக இருக்கக் கூடாது என்று ஸீதை ப்ரார்த்தித்து நமஸ்கரித்தாள்.

(இங்கு ப்ருஹஸ்பதி வாக்குக்குப் பதியானதால், ஹனுமார் சொல்லிய வாக்கு ஸத்தியமாவதற்கு ப்ருஹஸ்பதியின் ப்ரஸாதத்தையும் ப்ருஹஸ்பதியின் சிஷ்யனாகிய இந்த்ரனுக்கும் குருவின் அனுக்ரஹத்தால் வாக்ஸித்தி இருக்குமாகையால் இந்த்ரனின் ப்ரஸாதத்தையும், ப்ரம்ம தேவன் வாக்ரூபியாகிய ஸரஸ்வதிக்குப் பதியாகையால் அவர் ப்ரஸாதத்தையும், வாக்கிற்கு அதிஷ்டாதாவான தேவதை அக்னியாவதால் அக்னியின் ப்ரஸாதத்தையும் கோரி இவர்களை நமஸ்கரித்ததாகக் கொள்ள வேண்டும்).

முப்பத்திரண்டாவது ஸர்கம் முற்றும்

சுந்தர காண்டத்தில் மூன்றாவது ஸர்கத்தில் ஹனுமாரின் வாக்யம்.

1. பெருத்த புஜமுள்ள கபியான ஹனுமார் ஸ்ரீராம லக்ஷ்மணர்களால் இந்த லங்கையானது அனாயாஸமாய்

ஜயிக்கப்படும் என்ற எண்ணத்தால் மிக ஸந்தோஷம் அடைந்தார்.

ஸுந்தர காண்டத்தில் பதின்மூன்றாவது ஸர்கத்தில் ஹனுமத் வசனம்.

1. லக்ஷ்மணனோடு கூடிய ராமனுக்கும், ஜனக புத்ரியும் தேவியுமான அந்த ஸீதைக்கும் ருத்ரன், இந்த்ரன், யமன், வாயு, சந்த்ரன், ஸூர்யன், மருத்கணம் இவர்கள் எல்லோருக்கும் நமஸ்காரம்.

2. ராம கார்ய ஸித்திக்காகவும் ராவணன் அறியாம லிருப்பதற்காகவும் என் தேகத்தைச் சுருக்கிக் கொண்டேன். இங்கு ரிஷி கணங்களோடுகூடிய தேவர்கள் எனக்குக் கார்ய ஸித்தியை உண்டுபண்ணவேண்டும்.

3—5. தானாக உண்டானவரும் பகவானுமான ப்ரம்மாவும், தேவர்களும் எனக்குக் கார்ய ஸித்தியைக் கொடுக்கட்டும். மற்றும் அக்னியும், வாயுவும், வஜ்ராயுதம் தரித்த இந்த்ரனும், பாசத்தைக் கையிலுள்ள வருணனும், சந்த்ர ஸூர்யர்களும், மஹாத்மாக்களான அச்வினி தேவர் களும், ஸமஸ்த மருத்துக்களும், பரமேச்வரனும் எல்லாப் பூதங்களும், பூதங்களுக்கெல்லாம் ப்ரபுவான ஸர்வேச்வர னும் மற்றும் எனக்குப் புலப்படாதவர்களும் மார்கத்திலிருப் பவர்களுமான தேவர்கள் எல்லாம் எனக்குக் கார்ய ஸித்தியைக் கொடுக்கட்டும்.

பதின்மூன்றாவது ஸர்கம் முற்றும்

ஸுந்தர காண்டத்தில் இருபத்தைந்தாவது ஸர்கத்தில் ஸீதை வருத்தத்துடன் சொல்லும் வாக்யம்.

1. மலர்ந்த செந்தாமரை இதழ் போன்ற கண்களை உடையவரும், சிங்கம் போல் பராக்ரமத்துடன் செல்கிற

வரும். செய்நன்றி உள்ளவரும். இனிமையாகப் பேசுகின்றவருமான அந்த என் நாதனைப் புண்யம் செய்தவர்கள் பார்க்கின்றனர்.

சுந்தர காண்டம் முற்றும்

# யுத்த காண்டம்

## ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரம்

யுத்த காண்டத்தில் 107 ஆவது ஸர்கத்தில் இராவணன் ரதத்தை விட்டுத் திரும்பிச் செல்லும்பொழுது, இராமனுக்கு அகஸ்தியர் ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்திரத்தை உபதேசம் செய்யும் வாயிலாக இராவண வதத்திற்கு அருளாசி வழங்குதல்.

1, 2. தேவர்களோடு கூடிப் போரைப் பார்க்க வந்த ஷாட்குண்ய பரிபூர்ணராகிய அகஸ்த்ய முனிவரும் அப்பொழுது யுத்தத்தில் களைத்துப்போரில் கவலையுடன் நின்றுகொண்டிருக்கும் இராவணனை முன்னே கண்டு போருக்கு ஆயத்தமாகிய ஸ்ரீராமரை அணுகிப் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளினார்.

3 — 5. குழந்தாய்! அபிராமராகிய ஸ்ரீராம! மஹாபாஹுவே! போரில் எதனால் சத்ருக்கள் யாவரையும் வெற்றி பெறுவாயோ அதற்குத் திருச்செவி சாய்ப்பாயாக. ரகசியமானதும், அனாதியானதும், பாவனமானதும், எல்லாப் பகைவர்களையும் அழித்து வெற்றியை அளிப்பதும், அழிவற்றதும், மிக மங்களமானதும் எல்லா மங்களங்களுக்கும் மங்களகர்மானதும் எல்லாப் பாபங்களையும் போக்கவல்லதும், கவலையையும் சோகத்தையும் போக்க

வல்லதும், ஆயுளை வளர்ப்பதும் சிறந்ததுமான ஆதித்ய ஹ்ருதயத்தை எப்பொழுதும் ஜபிக்க வேண்டும்.

6 கிரணங்கள் கொண்டவராய் உதிப்பவரும் தேவர்களாலும், அசுரர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரும், ஒளியைத் தருபவரும், லோக நாதருமாகிய சூரிய பகவானைப் பூஜிப்பாயாக.

7. இவரே ஸர்வதேவ ஸ்வரூபி. தேஜஸ்வி. கிரணங்களை ஆக்கியவர். இவர் தேவாசுர கணங்களையும், உலகங்களையும் கிரணங்களால் ரக்ஷிக்கின்றார்.

8. இவர்தான் ப்ரம்ம தேவர். விஷ்ணு பகவான், ருத்ர மூர்த்தி, ஷண்முகர், ப்ரஜாபதி தேவர், தேவேந்த்ரர், குபேரர், காலமூர்த்தி, தர்மராஜர், சந்த்ரர், வருண தேவர்.

9. ஒளியைத் தருபவராகிய இவர்தான் பித்ருக்கள், வஸுதேவதைகள், ஸாத்யர்கள், அஸ்வினி தேவர்கள், மருத்துக்கள், மனு பகவான், வாயு தேவர், அக்னி தேவர், ப்ரஜைகளின் உயிர், ருதுக்களைப் படைத்தவர்.

10. அதிதி தேவியின் புதல்வர். ஸ்ருஷ்டிப்பவர். க்ரியைகளைச் செய்யுமாறு தூண்டுபவர். ஆகாயத்தில் சஞ்சரிப்பவர். மழையால் போஷிப்பவர். கிரணங்களை உடையவர். பொன்னிறங்கொண்டவர். பிரகாசிப்பவர். பொன்மயமான ப்ரம்மாண்டத்தை உண்டாக்கியவர். பகலை ஆக்கியவர்.

11. பச்சைக் குதிரைகளைக் கொண்டவர். பல கிரணங்களை உடையவர். ஏழு குதிரைகளை உடையவர். ஒளிக் கதிர்களைக் கொண்டவர். இருளை ஒழிப்பவர். க்ஷேமத்தைத் தருபவர். ஸர்வ ஸம்ஹாரகர். ஸர்வ ஸம்ஹாரத்தில் அழிந்தவற்றை மீண்டும் படைக்குமாறு தோன்றியவர். ப்ரகாசிப்பவர்.

12. ப்ரம்மாண்டத்தின் நடுவில் விளங்குபவர். (பணிந்தவர்களின் உள்ளத்தைக்) குளிரச் செய்பவர். தபிக்கச் செய்பவர். ஒளியை உண்டாக்குபவர். யாவராலும் துதிக்கப்பட்டவர். பகலில் தம்மிடம் அக்னியை வைத்துக் கொண்டு இருப்பவர். அதிதி தேவியின் புதல்வர். சாயங் காலத்தில் சுயமாகவே தனிவை அடைபவர். பனியை நாசம் பண்ணுபவர்.

13. ஆகாயத்திற்கு மன்னவர். ராகுவைப் பிளப்ப வர். ரிக் யஜுர், ஸாமம் என்னும் வேதங்களின் கரையைக் கண்டவர். பெரும் மழையை உண்டாக்குபவர். தண்ணீ ருக்கு நண்பர். விந்த்ய மலையைத் தக்ஷிணாயனத்தில் செல்லும் வழியாகக் கொண்டவர். புனல் போல் ஆகாய மாகிய ஸமுத்ரத்தில் செல்பவர்.

14. வெயிலையுடையவர். வட்டவடிவமானவர். அடைந்தவரது பகைவர்களை நாசம் பண்ணுபவர். உதய காலத்தில் பொன்னிறமானவர். மதிய நேரத்தில் எல்லோ ரையும் எரிக்கின்றவர். யாவராலும் துதிக்கப் பெற்றவர். இவ்வுலகத்தை நிர்வஹிக்கின்றவர். பெரும் காந்தி பொருந்தியவர். எல்லோரிடமும் அன்பு பாராட்டுபவர். எல்லோருடைய ஸம்ஸாரத்திற்கும் உத்பத்தி காரணர் (காரணமானவர்).

15. நக்ஷத்ரங்கள், க்ரஹங்கள் இவைகளுக்குத் தலைவரே, எல்லாவற்றையும் நிலைநிறுத்துபவரே, ஒளி பொருந்திய அக்னி முதலியவற்றுள்ளும் மிக்க ஒளி பொருந் தியவரே, (இந்த்ரன், தாதா, பகன், பூஷா, மித்ரன், வருணன், அர்யமன், அர்ச்சிஸ், விவஸ்வான், த்வஷ்டா, ஸவிதா, விஷ்ணு என்ற) பன்னிரண்டு மூர்த்திகளாக இருப் பவரே! தேவரீருக்கு நமஸ்காரம்.

16. கிழக்கு மலையை உதிக்குமிடமாக உடைய வருக்கு நமஸ்காரம். மேற்கு மலையை அஸ்தமிக்கும்

இடமாக உடையவருக்கு நமஸ்காரம். ஜோதிஸுக்களின் கூட்டங்களுக்கு மன்னவரான பகற்காலத்தின் அதிபதிக்கு நமஸ்காரம்.

17. உபாஸகருக்கு வெற்றி கொடுப்பவரும், வெற்றி, க்ஷேமம் இவைகளை அளிப்பவருமான பச்சை வண்ணக் குதிரை உடையவருக்கு நமஸ்காரம். ஆயிரம் கிரணங்களை உடையவருக்கு நமஸ்காரம். அதிதி தேவியின் புதல்வருக்கு நமஸ்காரம்.

18. உபாஸியாதவர்களிடம் கொடுமையைக் காட்டுகின்ற ஜனங்களைப் பல தொழிலில் மூட்டுகின்றவருக்கு நமஸ்காரம். வெகு வேகமாக ஆகாயத்தில் சஞ்சரிப்பவருக்கு நமஸ்காரம். தாமரை மலரை எழுப்புகின்றவருக்கு நமஸ்காரம். மார்த்தாண்டருக்குப் பன்முறை நமஸ்காரம்.

19. ப்ரம்மாவையும், சிவபிரானையும், விஷ்ணுவையும், எல்லா ஆபத்துக்களிலும் பாலனம் பண்ணுகிறவரும், ஜனங்களைத் தொழில் செய்யுமாறு ஏவுபவரும், ஆதித்ய ரூபமான காந்தியை உடையவரும், எல்லாவற்றையும் அழிப்பவரும், அழிக்கையில் கடுமையான உருவத்தை உடையவருமான உமக்கு நமஸ்காரம். (கடுமையான உருவத்தை உடைய சூரிய பகவானுக்கு நமஸ்காரம்).

20. இருளைப் போக்குகின்றவரும், பனியைப் போக்குகின்றவரும், (தம்மை அடைந்தவரது) பகைவரை அழிப்பவரும் அளவிடக் கூடாத ஸ்வரூபத்தை உடையவரும் நன்றியற்றவர்களை நாசம் செய்கின்றவரும், விளங்குபவருமான தேஜஸுக்களின் பதிக்கு நமஸ்காரம்.

21. உருக்கிவிட்ட தங்க நிறம் கொண்டவரும், அக்னி ரூபமாக நின்று ஹவிஸை வஹிப்பவரும், எல்லா ஜகத்துக்கும் கர்த்தாவும், அக்ஞான இருளைப் பிளப்பவரும்

ஒளிவடிவமானவருமான அந்தர்யாமியாய் இருத்தலால் ஜனங்களின் புண்ய பாபங்களுக்குச் சாக்ஷியானவருக்கு நமஸ்காரம்.

22. இவரே ஜகத்தை அழிக்கின்றார். ப்ரபுவாகுமிவர் அதையே உண்டாக்குகின்றார். இவர் எல்லாவற்றையும் வற்றுமாறு செய்கிறார். இவர் எதிர்த்து விடுகின்றார். இவர் கிரணங்களால் மழையைப் பொழியச் செய்கின்றார்.

23. இவர் ப்ராணிகள் உறங்கும்பொழுது அந்தர்யாமியாக இருந்து விழித்திருக்கின்றார். இவர்தான் அக்னி ஹோத்ரராய் இருப்பவர். அக்னி ஹோத்ரம் செய்பவர்களுக்குப் பயனாகவும் இருப்பவர்.

24. வேதங்களும், யாகங்களும், யாகங்களின் பயனும் உலகங்களின் எல்லாக் க்ரியைகளும் இந்த ஸர்வ சக்தராகிய சூர்ய பகவானே.

25. ஸ்ரீராம! ஆபத்துக்களிலும், கஷ்டங்களிலும், காடுகளிலும், மனக்கலவரங்களிலும் இதைச்(இந்த ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரத்தை) சொல்பவன் வருந்தாதிருக்கின்றான்.

26. ஒருமுகப்படுத்தப்பட்ட மனமுடையவனாய்த் (ஏகாக்ர சித்தனாய்) தேவர்களுக்குத் தேவரும், லோகங்களுக்குப் பதியுமாகிற இவரைப் பூஜிப்பாயாக இதை மும்முறை ஜபித்துப் போர்களில் வெற்றி பெறுவாய்.

27. மஹாபாகுவே! இந்த க்ஷணமே நீ ராவணனை வதைப்பாய்.

அப்பொழுது அகஸ்த்யர் இவ்வாறு மொழிந்தருளி விட்டு வந்த வழியே திரும்பிச் சென்றார்.

28. மஹா தேஜஸ்வியாகிய அவர் இதற்குத் திருச் செவி சாய்த்து, அப்பொழுது கவலை நீங்கியவராய் ஆனார். ஸ்ரீராமர் மிகக் களிப்புற்றவராய்ப் பொறிகளை அடக்கியவராய் அதை த்யானித்தார்.

29. வீர்யசாலியாகும் அவர் மும்முறை ஆசமனஞ் செய்து பரிசுத்தராக ஆகி வில்லைக் கைக்கொண்டு சூரியனைப் பார்த்துக்கொண்டு ஜபித்து அப்பொழுது மிகுந்த ஆனந்தத்தைக் கொண்டார்.

30. களித்த உள்ளங்கொண்ட அவர் ராவணனைப் பார்த்து யுத்தத்திற்கு நெருங்கி வந்தார். பெரும் முழு யத்னத்துடன் அவனுடைய வதையில் உறுதி கொண்டவராய் இருந்தார்.

31. அப்பொழுது தேவ கணங்களின் நடுவிலிருக்கும் சூரிய பகவான் மிக உள்ளங்களித்து உத்ஸாஹங் கொண்ட ஸ்ரீராமரைப் பார்த்து ராவணனது நாசத்தை அனுக்ரஹித் தருளிவிட்டுத் "துரிதப்படுத்துவாயாக" என்று திருமொழியைத் திருவாய் மலர்ந்தருளினார்.

ஆதி காவ்யமாகிய வால்மீகி ராமாயணத்தில் யுத்த காண்டத்தில் 107ஆவது ஸர்கமாக விளங்கும் ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரம் முற்றும்.

யுத்த காண்டம் முற்றும்



# ஸ்ரீ மஹாவீர வைபவம்

அடியார்களின் அச்சமாகிற இருளை ஒழிப்பதற்காகச் சக்ரவர்த்தித் திருமகனாகிற சூரியனாகத் தோன்றியவனாய், ஸீதா தேவியால் ஒளிமிகுந்தவனாய்ப் பரமாகாசமெனப்படும் ஸ்ரீவைகுண்டத்திற்குச் சூரியனாய் விளங்குபவனான ராமன் மேம்பட்டு விளங்குகிறான்.

1. உலகத்தில் தனக்கு மிக்கவன் இல்லையென்னும்படி போற்றத்தக்க எல்லையற்ற வீரம் மிகுந்த பெரிய வீரனே வாழ்க, வாழ்க.

2. தைர்யத்தை மிகுதியாகப் பெற்றவர்களுள் முதன்மையாக இருக்கும் இராமபிரானே!

## பால காண்டம்

3. தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் ஏற்பட்ட போரில் ஸ்ரீமந்நாராயணனான நீ வந்து ஜெயித்துக் கொடுத்த பொழுது தேவர்கள் அனைவராலும் போற்றிப் பேசப் பெற்றவனே!

4. இராவணனால் துன்புறுத்தப்பெற்ற தேவர்களின் கூட்டத்தால் ப்ரார்த்திக்கப்பட்டுத் தசரதன் புத்ரனாய் அவதாரம் செய்துள்ளவனே!

5. சூரிய வம்சமெனும் தாமரைக்குச் சூரியன் போன்றுத் திகழ்பவனே !

6. தேவர்களின் தலைவனான இந்த்ரனுக்குப் போரில் உதவி செய்வதில் வல்லவனான தசரதனுக்கு எஞ்சியிருந்த பித்ருக்களின் கடனைச் சக்கரவர்த்தித் திருமகனாக நீ அவதரித்துத் தீர்த்துவைத்தவனே.

7. இந்த உலகம் தோன்றியதற்கே காரணமாய் இருக்கும் நீ கோசலையின் திருவயிற்றில் புத்ரனாக அவதரித்ததால் நீ பகவான் என்பது மறையுமாறு செய்தவனே !

8. விச்வாமித்ரரின் வேள்வியைச் சிறுவயதிலேயே அநாயாஸமாக ரக்ஷித்து அளித்தவனே.

9. விச்வாமித்ரர் கொடுத்த அஸ்த்ரங்களைப் போரில் உதவி புரியுமாறு நீ பணித்தாய். போர் என்னும் யாகத்தில் முன் நின்று தொண்டு புரிந்து உனக்கு அவை வெற்றியை விளைவிக்கும்படி செய்துகொண்டவனே !

10. உன்னிடம் சரணாகதி செய்த அடியார்களின் எதிரிகளை அழிப்பதில் பெருமிடுக்கு கொண்டு விளங்கும் வலிய தோள்களை உடையவனே !

11. தம்மை யாரும் வெல்ல முடியாது எனச் செருக்குடன் இருந்த தாடகையையும் அவளது புத்ரர்களான ஸுபாஹு மாரீசன் ஆகியோரையும் ஒரு சிறிய அம்பினால் வதம் செய்தும், பலமிழக்கச் செய்தவனே !

12. பிறைச் சந்த்ரனைத் தலையில் தரித்தவனாயும், நடனம் புரிவதில் வல்லவனாகவும் இருக்கிற சிவனுடைய

சடையில் உனது திருவடித் தாமரையினின்றும் தோன்று கிற தேவ கங்கையைத் தாங்குகிறான். அந்தக் கங்கையின் விளைநிலமான உன் திருவடித் தாமரையின் துகள் கௌதம மஹரிஷியின் சாபத்தால் கல்லுருக்கொண்டு அஹல்யையின் மீது பட்டதால் சாபம் தீர்ந்து அழகிய மங்கையாய் நின்ற அஹல்யையால் போற்றப் பெற்றவனே!

13. உன்னால் முன்பு கேட்கப்பெறாததான விச்வாமித்திர முனிவரால் கூறப்பட்டதான பல்வகையான கதைகளைக் கேட்டவனே!

14. நல்ல அழகுடைய கண்களைப் பெற்ற மிதிலா நகரத்துப் பெண்களின் கண்ணுக்கு நல்விருந்தாய் இருப் பவனே! (சகோர பக்ஷி சந்த்ரனைக் காண்பது போல் உன்னைப் பார்த்து நின்றார்கள் மிதிலா நகரத்துப் பெண்கள்).

15. சிவதனுசை நாணேற்ற முயன்றபோது சிவனுடைய வில்லானது முறிந்துவிட்டது. அத்தகைய தோள்வலிமையுடையவனே!

16. சூரியகிரணங்களால் மலர்ந்த தாமரைக் காடு களைப் போன்று, உனது கண்கள் நன்கு மலர்ந்து தாமரை யைக் காட்டிலும் அழகு பெற்று விளங்கும் சிறப்புடைய வனே!

17. சிவபிரானது வில்லை நாணேற்ற வேண்டும் என்ற பணயமானது யாராலும் முடியாமல் போய்விட்டால் ஸீதையின் விவாஹம் என்ன ஆகும்? எனக் கவலையுட னிருந்த ஜனகனது கவலையைச் சிவதனுசை முறித்துத் தீர்த்து வைத்தவனே!

18. எல்லா அரசர்களாலும் நாணேற்ற முடியாத தான அந்த வில்லை நாணேற்றியமையால், ஜனகனின்

மகளான ஸீதையின் கொங்கைத் தலத்தில் லீலைகள் புரிவதற்கு ஏற்றவையாகிய கைகளை உடையவனே !

19. உறுதியான கோடரியைக் கையில் தாங்கிய பரசுராமர், விஷ்ணுவின் அம்சமாகத் தன் கையிலிருந்த வில்லை யாராலும் நாணேற்ற முடியாது எனக் கர்வத்தோடு இருக்கையில், அதனை வாங்கி நாணேற்றி அவரின் கர்வத்தை அழித்ததோடு உன் உண்மையான தன்மையையும் உலகுக்கு அறிய வைத்தவனே !

20. தக்ஷனுடைய யாகத்தை அழித்த சிவனுடைய கைலாச மலையைப் பந்தாக விளையாடுவதில் முதலிலுள்ளவனும், உலகத்திற்குத் துன்பத்தைக் கொடுப்பவனும் இந்த்ரனுடன் போர் புரியும்பொழுது இந்த்ரனின் யானையாகிய ஐராவதமானது இராவணனை முட்டியதால் உடலில் உண்டான தழும்புகளால் மேடு பள்ளங்களையுடைய இராவணனை அடக்குவதில் வல்லவனும், ஆயிரம் கைகளையுடைய கார்த்தவீர்யன் முதலிய அரசர்களை அழித்து அவர்களின் ரத்தத்தைத் தேக்கி அதில் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்யப்பட்ட பரசுராமனுடைய ஸத்கதிக்குத் தடை செய்த தாழ்ப்பாள் போன்ற வளைந்த அம்புகளையுடையவனே !

21. தன் தந்தையின் சொல்லைப் பொய்யாக்காது நிறைவேற்றுவதற்காக உனக்கு வந்த இளவரசுப் பட்டத்தையும் உதறித் தள்ளியவனே !

22. குஹன் என்னும் வேடர் தலைவனுடன் நட்பினால் குறிப்பிடப்பட்ட கடல் போன்றதான கருணைக் குணத்துக்கு உறைவிடமாய் உள்ளவனே !

23. பரத்வாஜ முனிவர், சிறப்பாய் உபசரித்துச் சித்ரகூட மலையின் அடிவாரத்தில் அழகிய பர்ணசாலை

அமைத்துக் கொடுத்து அதில் உறையும்படிக் கட்டளை இட்டதை ஏற்றுத் தங்கியவனே !

24. யாராலும் கட்டளையிடத் தகாதவனே !

25. குடிமக்களோடு வந்து பரதன் உன்னைத் திரும்பவும் ராஜ்யத்தை ஏற்குமாறு வேண்டியபோது உனது பாதுகைகளைச் சிரமேற்கொண்டு நடத்தப்பெற்ற யோக க்ஷேமத்தையுடையவனே !

26. இந்த்ரனின் மகனான காகன், மாம்ஸத்தில் விருப்பங்கொண்டு ஸீதாப்பிராட்டியிடத்தில் அபசாரம் செய்ததால் சிறு துரும்பை ப்ரம்மாஸ்த்ரமாகக் காகத்தின் மீது எய்தாய். அதைக் கண்டு அஞ்சியோடுகின்ற காகத்தைக் காக்கத் தேவர்களும், முனிவர்களும் அஞ்சினர். மேலும் தர்பையின் துண்டானது ப்ரம்மாஸ்த்ரமாய் வடிவு கொண்டு செய்த அத்புதச் செயல்களைக் கண்டு அனைவரும் கொண்டாடுமாறு ஆற்றல் காட்டியவனே !

27. நீ விடுத்த அந்த (அம்பானது) ப்ரம்மாஸ்த்ரமானது துரத்தும்போது காகமானது பிரம்மன், சிவன், இந்த்ரன் ஆகியோர்களிடம் வேண்டியும் யாரும் காப்பாற்ற இயலாதவராய் இருந்தனர். அவர்களே பயப்படுமளவிற்கு அச்சிறு துரும்பின் பலம் பெருமை வாய்ந்ததாக விளங்கச் செய்தவனே !

## ஆரண்ய காண்டம்

28. தவம் புரிவதற்கு ஏற்றதான தண்டகாரண்ய வனத்தில் நடை போடுகின்ற பாரிஜாத மரத்தைப் போன்றவனே.

29. விராதனென்னும் மானுக்கு (மான் போன்ற அரக்கனுக்கு) புலி போன்றவனே !

30. அனேகமான பலன்களைத் தருகின்ற யாகப் பயிர்களை அழிக்கின்ற அரக்கர்களாகிய விலங்குகளை அழிக்கத் தொடங்கியதால் மரவுரியணிந்த முனிவர்களுக்கு அனுகூலத்தைச் செய்தவனே !

31. த்ரிஸிரஸ் என்னும் அரக்கனின் தலையாகிய இருளை ஒழிக்கக் கூடிய சூர்யன் போன்றவனே !

32. தூஷணனென்னும் அரக்கனை அழித்துக் கடல் போன்ற அவனை வற்றச் செய்தமையால் முனிவர் கூட்டமானது மகிழ்ந்து உன்னை ஜய ஜய என வாழ்த்தப் பெற்றவனே !

33. கரன் என்னும் மிகக் கொடிய அரக்கனைப் பெருங்காற்றானது மரத்தை வீழ்த்துவது போல அழித்தவனே !

34. முற்கூறிய மூன்று அரக்கர்களுடன் சேர்ந்து போர் புரிய வந்த பதினாலாயிரம் அரக்கர்களையும் பெரிய யானையானது கோரைக்காடுகளை அழிப்பது போல வெகு விரைவில் அழித்தவனே !

35. வேறு துணையே வேண்டாத பெரு வீரனே !

36. வேறு யாராலும் செய்ய முடியாத பல செயல்களைத் துணிவாகச் செய்பவனே !

37. மிகப்பெரியதான போரை ஸீதாபிராட்டியானவள் மகிழ்ந்து மிக இறுகக் கட்டிக் கொண்டதால் ஆற்றப்பட்ட பெரியதான வீரப்புண்களை உடையவனே !

38. கபடமாக மான் வடிவு கொண்ட மாரீசனை அழித்து அதனுடைய தோலினால் அழகு படுத்தப்பட்ட தர்பாஸனத்தை உடையவனே !

39. ஸீதையை அபகரித்துச் செல்லும்போது, தனது வீரத்தைக் காட்டுவதால் புகழைப் பெறுவதற்காக விற்கப் பெற்ற உயிரை உடைய ஜடாயுவின் உடலைத் தஹனம் செய்ய விரும்பியதால் உனது பக்த ஜனங்களிடம் நீ காட்டக் கூடிய கருணையுள்ளங் கொண்டவனே !

40 கபந்தனென்னும் அசுரனை அழித்து அவனை எரித்தாய். அவன் தன் சாபந் தீர்ந்து மீண்டும் தெய்வத் தன்மை பெற்று உன்னை வாழ்த்திச் செல்லுமாறு திகழ்ந்தவனே !

41. பெருமைக்குரிய முனிவர் கூட்டத்தை அண்டிய மையால் சபரி என்னும் மூதாட்டிக்குத் தன் மனக் களங்க மானது ஒழிக்கப் பெற்று, மோக்ஷத்துக்கு ஸாக்ஷியாய் இருந்தவனே !

42. வாயு புத்ரனான ஹனுமனுடைய மங்கள மான பேச்சுக்களாலே மகிழ்விக்கப்பெற்ற உள்ளத்தை உடையவனே !

43. இராவணனிடமிருந்து ஸீதையை மீட்கச் சூர்ய புத்ரனான சுக்ரீவனிடம் தான் செய்த சரணாகதியால் சுதந்திரத்தை அடைந்த ஸர்வேச்வரனே !

44. சுக்ரீவன் தனது அண்ணனான வாலியை உன்னால் வெல்ல இயலுமா ? என ஐயமுற்றதால் அவனுக்கு உனது பலத்தைக் காட்டுவதற்காக இறுகப் பிணைக்கப் பெற்ற கைலாஸ மலையின் சிகரத்தைப் போல் பெருட சரீரமுடையவனான துந்துபி என்னும்

அசுரனுடைய எலும்புக் குவியலை இடப்பக்கத்தின் திருவடிக்கட்டை விரலை சிறிது அசைத்தலாலேயே நெடுந் தூரம் எறிந்தமையால் நம்பிக்கையூட்டப்பெற்ற நண்ப னான சுக்ரீவனுடைய உள்ளத்தை உடையவனே !

45. உனது அம்புகளின் பலத்தை அறிய விரும்பிய சுக்ரீவனுக்காகப் பிடி அதிகமாக உள்ள அம்பை எய்தாய். அந்த அம்போவெனில் ஏழு மரங்களைத் துளைத்ததோடு நில்லாமல் மலைகள், பூமி ஆகியவைகளைத் துளைத்துப் பாதாளத்துக்கும் சென்று திரும்பவும் வந்து உனது அம்பறாத் தூணியிலே விழுந்தது. இவ்வாறு விசித்ரமான செயல்களை உடையவனே !

46. வாலி ஸந்த்யா வந்தனம் செய்யும்போது இடை யூறு இழைத்த இராவணனைத் தனது கை இடுக்குகளில் இறுக்கிப் பிடித்துக் கொண்டதால் இராவணனுக் குப் பேரச்சத்தை விளைவித்தவனும், நான்கு கடல் களிலும் விளையாடுவதில் வல்லவனும், குரங்குக் கூட்டத் தலைவனுமான வாலியின் அகன்ற கற்பாறை போன்ற மார்பைப் பிளக்கக் கூடிய வலிமை மிக்க அம்பை உடையவனே !

## சுந்தர காண்டம்

---

47. கரைகாண இயலாததான கடலென்னும் அகழி யால் சூழப்பெற்ற இராவணனது நகரமாகிய இலங்கையில் தீமூட்டிய மிக்க வேகமுடையவனான வாயு புத்ரனான ஹனுமானை அணைத்துக்கொண்டதால் உண்டான எல்லார் செல்வத்தையும் உடையவனே !

# யுத்த காண்டம்

48. பகைவன் இராவணன். அவனது தம்பியான விபீஷணனை ஏற்றுக் கொள்வதில் மந்த்ரிகளான வானரர் களுக்கு நம்பிக்கையூட்டும் பொருட்டு, கருத்து வேறுபாடு களைக் களைவதற்காக வெளிப்பட்ட ஸர்வேச்வரத் தன்மை உடையவனே !

49. சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுவதில் வ்ரதம் மேற்கொள்ளப் பெற்றவனே !

50. மிக்க வீரமுடையவனே !

51. வ்ரதத்தைத் தவறாது நிறைவேற்றியவனே !

52. ஸமுத்ரராஜனைச் சரணமடைந்து வழி கேட்டு ப்ராயோபவேசம் செய்ததாலே கடலில் மணல் திட்டை உடையவனே !

53. உனது அம்பானது ப்ரளய காலத்திய அக்னி யைப் போலத் தீக்கொழுந்தைக் கொண்டு விளங்கியதால் கடலின் நீர் வெள்ளத்தை வற்றச் செய்துவிட்டது. அத்தகைய பெருமை பொருந்திய அம்புகளை உடையவனே!

54. மிக வலிமை வாய்ந்த பகைவர்களுடன் போர் புரிவதில் விருப்பத்தோடு இருந்த குரங்குக் கூட்டங்கள் மலைகளைப் பஞ்சு போலாக்கிக் கொண்டுவந்த மலை களால் கட்டப் பெற்ற அணையுடன் கூடிய கடலை உடையவனே !

56. வானரப் படையானது இலங்கையைச் சென்று முற்றுகையிட்ட பிறகு நீ உனது வில்லை நாணேற்றினாய்.

நீ நாணேற்றிய அந்தச் சப்தத்தைக் கேட்ட இலங்கையி லுள்ள அந்தப்புர ஸ்த்ரீகளின் உடல் நடுக்கமாகிய ஆடலுக்கு ஆசிரியனாக விளங்கிய நாணோசையை உடையவனே !

56. யுத்தத்தில் ப்ரயோகம் செய்யப் பெற்ற நாகாஸ்த்ரத்தால் இருவரும் மூர்ச்சையாய் இருந்தபோது ஆகாயத்தில் பறக்கிற மேருமலையின் பெருமை பெற்ற வேதஸ்வரூபனாகவுள்ள உனது தோழனான கருடனின் இறக்கைக் காற்றானது பட்டவுடன் போக்கடிக்கப் பெற்ற நாகாஸ்த்ரத்தின் துன்பத்தை உடையவனே !

57. அரக்கர் படைகளின் தலைவர்கள் இதற்கு முன்பு வானரங்களுடன் போர் செய்யாத காரணத்தால் வெட்கப்பட்டுக் கண்களை மூடிக்கொண்டனர் அவ்வாறு போர் செய்த அரக்கர்களின் கதவு போன்ற மார்புகளைப் பிளப்பதில் சக்தியுடைய கோபத்தையும் செருக்கையும் உடையவனே !

58. உனது வில்லில் நாணேற்றும்போது எழுகின்ற "டங்கார" ஒலியானது விரோதிகளுக்கு மிக அச்சத்தினைக் கொடுக்கக் கூடியது. அதிலிருந்து கிளப்புகின்ற கொடிய அம்பின் அடியால் பிளக்கப்பட்ட கிரீடங்களையுடைய, கலங்கிய மனமுடைய விஸ்ரவஸ்ஸின் புத்ரனான இராவண னுக்கு இளைப்பாற ஸமயத்தைக் கொடுத்தமையால் உண்டான புகழ்பெற்ற வீரத்தை உடையவனே !

59. கும்பகர்ணனென்கின்ற குலமலையைப் பிளப் பதில் வஜ்ராயுதமாயுள்ள ஐயத்திற்கே இடமில்லாததான அம்பை உடையவனே !

60. ஆபிசாரம் செய்வதற்காக வளர்த்த அக்னி ஹோமத்தில், ஹோமத்தைத் தடுக்கும் பொருட்டு ஒன்றன் மேல் ஒன்றாக வந்து விழுந்த கடல் வெள்ளம்

போன்ற வானரப்படை எழுப்பிய கலகலவெனும் சப்தத்தால் கோபங்கொண்ட இந்த்ரஜித்தைக் கொன்ற தம்பியை, (லக்ஷ்மணனை) ஸாக்ஷியாகக் கொண்ட அரக்கர் களுடன் நடந்த மற்போரை உடையவனே !

61. ஒப்பார் யாருமில்லை என்ற பராக்ரமத்தை யுடையவனே !

62. பரமசிவனைக் காட்டிலும் அதிகமாயும், பயங்கர மாயுமுள்ள அஸ்த்ரங்களின் சக்தியை உடையவனே !

63. தேர்ப்பாகனால் திருப்பிச் செலுத்தப்பட்ட தேரையுடையவனும், வெட்கமடைந்தவனுமான இராவண னால் உண்மையென நிரூபிக்கப்பட்ட வீர்யமுள்ளவனே !

64. உனது கூரிய அம்புகளானது இராவணனது பத்து தலைகளையும் அறுத்துத் தள்ளியது. பகைவனான இராவணன் பெற்ற வரத்தால் மறுபடி மறுபடி உண்டா கின்றது. இதைக் கண்ட இந்த்ரன் மிகவும் குழப்பத்தோடு நிற்கும் போது ப்ரம்மாஸ்த்ரத்தால் சுத்தமாக அறுத்துத் தள்ளியமையால் உண்டான சந்தோஷத்தால் இந்த்ரனின் ஆயிரம் கண்களும் ஆயிரம் (தாமரை) மலர்களாக மலர்ந்து நின்றன. இவ்வாறு மலர்ந்த அழகுடன் கூடிய ஆகாயத்தி லின்றும் விழுந்த கற்பக மரங்களின் புஷ்பங்களின் கூட்டத் தால் மணமூட்டப்பெற்ற தேரின் வழியை உடையவனே !

65. உலக மக்கள் அனைவரைக் காட்டிலும் அதிகத் தோள் வலிமையுள்ளவனும், வரங்கள் பல பெற்றும் பலம் அதிகமாக உள்ளவனும், பத்து தலை உடைய இராவண னுடைய பத்து தலைகளும் உன்னால் அறுக்கப்பட்டதால் ஏற்பட்ட துன்பத்தால் தன் நினைவை இழந்த இராவண னின் மனைவியான மண்டோதரியின் புலம்பற் சொற்கள்

அனைத்தும் வேதாந்த விஷயங்களுக்கு ஒத்த பொருளைத் தரக்கூடியனவாயும் உனது ஸ்வரூபம். குணம் போன்றவைகளைப் பேசுவதாக அமைந்திருந்தன. அவ்வாறு இருக்கக் கூடிய வேதாந்த வாக்யங்களைக் கூறி ரிஷிகள் போற்றுகின்ற புகழுக்குரியவனே !

66. இராவண வதத்திற்குப் பிறகு விபீஷணன் ஸீதாப்பிராட்டியை உன்னருகில் அழைத்து வந்தபோது இந்த்ரன், அக்நி, யமன், நிர்ருதி, வருணன், வாயு, குபேரன், சிவன் ஆகிய தேவர்கள் அனைவரும் உன்னை ஸ்தோத்ரம் செய்து பிராட்டியை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினர். அப்போது அவர்கள் செய்த ஸ்தோத்ரத்தால் மகிழ்ச்சி அடைந்தவனே !

67 அளவற்ற அறிவுடையவனான ப்ரம்மனால் அறியப்பட்டுக் கூறப்பெற்ற கடலின் நீர்த்திவலையின் அளவையுடைய தற்பெருமை உடையவனே !

68. இராவண வதத்தால் தேவேந்த்ரன் பயம் நீங்கியது. இக்கார்யத்தால் மகிழ்ச்சியடைந்த தேவேந்த்ரன் ஏதேனும் தொண்டு செய்ய விரும்பி வேண்டினான். அப்போது உன்னால் சொல்லப் பெற்ற கார்யமான போரில் இறந்த அனைத்துவானரங்களையும் உயிர்ப்பித்துக் கொடுக்குமாறு கூறியதைச் செய்ததால் உண்டான வானரப் படை வெள்ளத்தை உடையவனே.

69. தன் ஸங்கல்பத்தால் பிரிந்தும் (இராவண வதத்திற்குப் பிறகு), கூடியும் உள்ள மனமொத்து இருக்கிற மனைவியை உடையவனே !

70. விபீஷணனுக்குக் கொடுக்கப் பெற்ற இலங்கைச் செல்வத்தை உடையவனே !

71. கடமையைச் செய்து முடித்தவனே !

72. ஆகாயத்தாமரை போன்று இல்லாத பொருளாக ஆக்கப்பெற்ற பகைவர் கட்சியை உடையவனே!

73. யுத்தம் முடிந்து அயோத்திக்குத் திரும்புவதற்காக விபீஷணனால் கொண்டுவரப்பெற்ற புஷ்பக விமானமானது உனது அனுக்ரஹத்தால் கடல் போன்ற ஆகாயமானது பசுவின் குளம்பு போன்று செய்யப் பெற்ற பெருமையை உடையவனே !

74. சபதமாகிய கடலைக் கடப்பதில் ஊக்கம் கொண்ட பரதனுடைய ஆசையைச் சிம்மாசனத்தில் ஏறித் தீர்த்து வைத்தவனே !

75. தலைவனே !

76. ரகு குலத்தலைவர்களுள் உயர்ந்தவனே !

# உத்தர காண்டம்

77. அயோத்தியில் முடி சூட்டிய பிறகு இராமனது திருவடித் தாமரைகளில் வீழ்ந்து வணங்க வருகின்ற அரசர்களின் கிரீடங்களிலுள்ள இரத்தினங்களால் மேருமலையின் தாழ்வரை போன்று ப்ரகாஸிக்கின்ற பாத பீடத்தை உடையவனே !

78. அயோத்யை எனப் பெயர்பெற்ற தேவலோகத்திற்கும் பூலோகத்திலுள்ள அயோத்திக்கும் ஈச்வரனாக இருப்பவனே !

79. தன் தந்தையைக் கொன்றதால் கோபங் கொண்ட பரசுராம முனிவர் இராஜவம்சத்தைக் கொன்றார். இத்துன்ப நிகழ்ச்சிக்குமுன்பு தர்மம் தவறாது ஆண்டு வந்த அரசர்களைக் காட்டிலும் நூறு மடங்கு அதிகம் தர்மம் தவறாது ஆண்ட இராஜ குலத்தை உடையவனே !

80. நற்செய்கைகளில் ஈடுபட்ட பரதனாலே அடக்கப்பட்ட கர்வத்தையுடைய கந்தர்வக் கூட்டத்தினரால் பாடப்பெற்ற நூற்றுக்கணக்கான வெற்றிப் பாடல்களை உடையவனே!

81. லவணாசுரனைக் கொன்ற சத்ருக்னனால் வழிபடப்பெற்றவனே!

82. குச லவர்களால் கற்றுக்கொள்ளப் பெற்ற உனது வம்சத்தைப் பற்றிய பாடல்களை உடையவனே !

83. தெய்வ வசத்தால் ஸ்லோகமாக மாறுகின்ற வடமொழி வாக்கையுடைய உயர்ந்த கவியான வால்மீகியால் இயற்றப்பெற்ற தன் வரலாற்றை விளக்குகின்ற ஸ்ரீமத் ராமாயண க்ரந்தத்தை குச லவர்கள் அசுவமேத யாகத்தின் போது இனிமையாகப் பாடியதைக் கேட்டு மகிழ்ந்தவனே !

84. எல்லா ஜனங்களாலும் மிகவும் போற்றப் பெற்றவனே !

85. மறுபடியும் கொண்டுவரப்பட்ட உயர்ந்த புஷ்பக விமானத்தைக் கொடுத்தலால் மகிழ்விக்கப் பெற்ற புகழை உடையவனே !

86. மரணமடைந்த முனிவரின் புதல்வனை உயிர் பிழைக்கச் செய்யும் அமுதம் போன்றவனே !

87. த்ரேதாயுகத்தில் நடத்தப்பட்ட க்ருதயுகத்தின் தர்மங்களை உடையவனே!

88 குறைவற்ற பெரும் பொன்னையே தக்ஷிணை யாகக் கொண்டு பற்பல அசுவமேத யாகங்களைச் செய்து நன்கு நிறைவேற்றப்பட்ட தனது ஜாதி, ஆச்ரமம் ஆகிய வற்றிற்குரிய கடமைகளை உடையவனே !

89. எல்லாக் கர்மங்களாலும் நன்கு ஆராதிக்கப் படுபவனே !

90. நிலையான தர்ம வடிவு கொண்டவனே !

91. கோசல நாட்டில் பிறப்பதையே செல்வமாகக் கொண்ட ஜங்கமப் பொருள், அதனினும் வேறுபட்ட ஸ்தாவரமாகிய ப்ராணிக் கூட்டங்களுக்கும் உயர்ந்த லோகத்தை கொடுத்ததால் காட்டப்பட்ட அழியாத எல்லையற்ற பெருமையை உடையவனே !

92. ஸம்ஸாரம் என்கிற சூரியனால் தவிக்கும்படி செய்யப்பெற்ற அடியார்களின் கூட்டத்திற்கு மங்களமான பூஞ்சோலை போன்றுள்ளவனே !

93. ஸ்ரீராமபத்ரனே !

94. இவ்வாறு பல பெருமைகளையுடையவரான உங்களின் திருவடித் தாமரைகளைப் பலமுறை வணங்கு கின்றேன்.

இராமனாய் அவதரித்த ஸர்வேச்வரனுக்கு நான்முான் புத்ரன். அவன் புத்ரனான சிவன் இராமபிரானுக்குப் பேரனாவான். இவ்வாறு புத்ரன். பேரன் முதலியவர்களை உடையவனாய் ஸீதையுடன் கூடியவனாய் இல்லறத்தை நடத்துபவனான ஸ்ரீராமபிரானுக்கு நமஸ்காரம்.

கவிகள், தார்க்கிகர்கள் இவர்களுக்குச் சிங்கம்போன்ற வேதாந்த தேசிகனால் இயற்றப்பட்டதாயும், கடினமாயும், மென்மையாயும் உள்ள பதங்கள் சேர்ந்து ஆழ்ந்த கருத்துடையதாய் ஸம்ஸார பயத்தைப் போக்குகின்ற மருந்தாயுள்ளதான இந்த மஹாவீர வைபவமென்னும் வசன நடை நூலை அறிஞர்களே படியுங்கள்.

ஸ்ரீ மஹாவீர வைபவம் முற்றும்



ஸ்ரீ காயத்ரீ ராமாயண ச்லோகங்களும்-ஸ்ரீமத்ராமாயண-காண்ட-ஸர்க-ச்லோக எண்களும்

M. L. J. Press Second Edition. (1958) Page Numbers.

| வரிசை எண். | ச்லோகத்தின் தொடக்கம் | காண்டம் | ஸர்கம் | ச்லோகம் | M. L. J. அச்சகத்தில் அச்சாகிய புத்தகத்தின் பக்க எண். |
|---|---|---|---|---|---|
| 1 | तपःस्वाध्याय | बाल. | 1 | 1 | 1 |
| 2 | स हत्वा राक्षसान् | ,, | 30 | 24 & 25 | 48 |
| 3 | विश्वामित्रस्तु | ,, | 67 | 12 | 92 |
| 4 | तुष्टावास्य | अयोध्या. | 15 | 20 & 21 | 134 |
| 5 | वनवासं हि | ,, | 40 | 14 | 178 |
| 6 | राजा सत्यं च | ,, | 67 | 34 | 224 |
| 7 | निरीक्ष्य स | ,, | 99 | 25 | 268 |
| 8 | यदि बुद्धिः कृता | आरण्य. | 11 | 44 & 45 | 313 |
| 9 | भरतस्यार्यपुत्रस्य | ,, | 43 | 17 | 361 |
| 10 | गच्छराममथः | ,, | 72 | 17 | 408 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 11 | देश कालौ | किष्किन्धा. | 22 | 20 | 455 |
| 12 | वन्धास्तु ते | ,, | 43 | 34 | 500 |
| 13 | सनिर्जित्य पुरीं | सुन्दर. | 4 | 1 | 545 |
| 14 | धन्या देवाः | ,, | 26 | 41 & 42 | 585 & 586 |
| 15 | मङ्गलाभिमुखी | ,, | 53 | 27 & 28 | 635 |
| 16 | हितं महार्थं | युद्ध. | 10 | 27 | 680 |
| 17 | धर्मात्मा रक्षसां | ,, | 41 | 69 | 734 |
| 18 | यो वज्रपाता | ,, | 59 | 139 | 773 |
| 19 | यस्य विक्रम | ,, | 72 | 11 | 813 |
| 20 | न ते ददृशिरे | ,, | 94 | 26 | 859 |
| 21 | प्रणम्य देवता | ,, | 119 | 23 | 903 |
| 22 | चलनात्पर्वतस्येव | उत्तर. | 16 | 26 & 27 | 955 |
| 23 | दाराः पुत्राः | ,, | 34 | 41 | 999 |
| 24 | यामेव रात्रिं | ,, | 66 | 1 | 1049 |

## ॥ श्लोकानुक्रमणिका ॥

| क्रम संख्या | श्लोक: | | पुट संख्या |
|---|---|---|---|
| 205 | यदि वुद्धिः कृता | ... | 40 |
| 206 | यदृच्छयैव : | ... | 3 |
| 207 | यस्य विक्रम | ... | 42 |
| 208 | यानि रामस्य | ... | 18 |
| 209 | यामेव रात्रिं | ... | 42 |
| 210 | ये नराःकीर्त्तयिष्यन्ति | ... | 24 |
| 211 | येन सप्त | ... | 16 |
| 212 | यो रामं प्रतियुध्येत | ... | 20 |
| 213 | यो वज्र पाता | ... | 41 |
| 214 | यः प्रग्रहान् | ... | 7 |
| 215 | रक्षिता जीवलोकस्य | ... | 19 |
| 216 | रक्षिता स्वस्य | ... | 29 |
| 217 | रक्षिता स्वस्य वृत्तस्य | ... | 33 |
| 218 | रघूणां कुलदीपश्च | ... | 55 |
| 219 | रश्मिमन्तं समुद्यन्तं | ... | 36 |
| 220 | राज्यार्हावमर | ... | 13 |
| 221 | राजर्षि देव | ... | 12 |
| 222 | राजर्षीणां गुणश्रेष्ठः | ... | 32 |
| 223 | राजविद्या विनीतश्च | ... | 19 |
| 224 | राजा सत्यं च | ... | 40 |
| 225 | राज्ञः पुत्रा | ... | 2 |
| 226 | राम राम | ... | 36 |
| 227 | रामं रत्न किरीट | ... | 53 |

## AN APPEAL

Manuscripts on Palm Leaf or Paper of the ancient works of the wise men of the past, are the great treasures, solely inherited by the Nation and it is the moral obligation of persons who possess them to preserve them safely for the future generations of mankind.

Probably you have some of these in your possession or you know friends or neighbours who possess them. You can make a great contribution to the cause of the preservation not only of our National Culture but also to the Culture of Humanity as a whole by arranging to present such manuscripts to the famous T. M. S S. M. Library, Thanjavur.

The manuscripts so presented will be accepted and acknowledged with pleasure and gratitude by the authorities of the Library, preserved with meticulous care and made available to successive generations of readers and scholars for study and research. The hitherto unpublished works found among them, will be printed and published in due course, as facilities occur, with the expression of the Library's gratitude for your gift.

The great Scholar-King of Tanjore, Rajah Serfoji, has attained immortal fame by dedicating enormous time and wealth to the expansion and firm establishment of this world-famous 'Sarasvati Mahal Library.' It is open to you to share the honour of Serfoji, in your own measure by contributing your manuscripts to the great institution built by him.

This great Honour is beckoning to you to accept it. Will you hasten to take it up? The Library waits for your answer.

**DIRECTOR,**
**Sarasvati Mahal Library, Thanjavur.**

